REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 0—1—0 (7 காசுகள்) ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 5] சென்னை: ஆனி 25வ செவ்வாய் (9—7—57) ★ ★ வெளியூர்: ஆனி 26வ புதன் (10—7—57) [இதழ் 20

## பக்தர்கள், சர்க்காருக்கும் பணம் தரட்டுமே!

சென்னை, ஜூலை 9—

"கோவில்களில் அர்ச்சனை செய்யும் பக்தர்கள், பூசாரிக்குக் காணிக்கை தருகின்றனர்; அதுபோது, சர்க்காருக்கும் கொஞ்சம் பணம் தருமாறு செய்யலாம்," என்று தோழர் க. அன்பழகன், நேற்று சட்டசபையில் பேசுகையில் ஒரு யோசனை கூறினர்.

# 'நிதி அமைச்சர் சுப்பிரமணியம் பத்து ஆண்டு தவணை கேட்பதின் காரணம் என்ன?'

## 'நமக்கும் இந்த மாநில சர்க்காருக்கும் சண்டை இல்லையே!'

## 'நம் போராட்டம் எல்லாம் டெல்லிக்கு எதிராகத்தானே!'

## 'மாநில அமைச்சர் சமாதானம் கோருவதில் பொருள் ஏது?'

## அண்ணு தெளிவுரை

"சென்னை சட்டசபையில் நிதியமைச்சர் சுப்பிரமணியம் அவர்கள் 'ஒரு 10 வருட காலத்திற்கு நாம் சண்டை போட்டுக்கொள்ளாமல் இருக்கலாம்' என்று என்னிடத்திலே சொன்னுர்கள். அதைப் பற்றி என்னுடைய கருத்து, எனக்கு முதலிலே நிதியமைச்சர் சுப்பிரமணியத்தினுடைய பொருள் விளக்கப்பட்டாலொழிய, அதற்குப் பதில் சொல்வதிலே அவ்வளவு அர்த்தமிருக்காது என்று கருதுகின்றேன்.

"10 வருடகாலத்திற்கு சமாதானமாக இருக்கலாமென்ருல், நாம் எப்பொழுது சண்டை போட்டுக்கொண்டோம் என்பது தீர்மானிக்கப்பட வேண்டும்; யாரிடத்திலே சண்டை போட்டுக்கொண்டிருக்கிரேம் என்பது தெளிவாக்கப்படவேண்டும்.

"எனக்கும் நிதியமைச்சருக்கும் சண்டையில்லை; எனக்கும் இந்த சர்க்காருக்குக்கூட சண்டையில்லை; எனக்கும் காங்கிரஸ் கட்சிக்குக்கூட சண்டையில்லை. திராவிட முன்னேற்றக் கழகத்திற்கும்—டில்லி ஏகாதிபத்தியத்திற்கும் சண்டை. இங்கே இடையிலே சுப்பிரமணியம் ஒரு 10 வருடத்திற்கு சமாதானமாகயிருக்கலாம் என்ருல்...? அப்படிக் கேட்க வேண்டியவர்கள் டில்லி அரசினர்—அவர்கள் கேட்கட்டும். அதற்கு என்ன பதிலோ...! அதை அப்பொழுது அளித்துக்கொள்ளலாம்; இவர் கேட்பதற்கும் பதில் அளிப்பதற்கும் பொருள் ஒன்றும் இல்லை.

"நான் நாட்டு மக்களைப் பார்த்து, 'காங்கிரஸ் ஆட்சிக்காரர்களுக்கு வரி கட்டாதீர்கள்! அவர்கள் போடுகின்ற சட்டங்களை எல்லாம் மீறுங்கள்! அவர்கள் அமுலுக்கு அடங்கி நடக்காதீர்கள்!' என்று நான் தூண்டிவிடுவதாக இருந்தால்—அந்த வகையிலே சென்னை சர்க்காருக்கு ஏதேனும் சங்கடங்கள் இருந்தால், அப்பொழுது நிதி மந்திரி சுப்பிரமணியம் என்னைப் பார்த்து, 'என்ன அண்ணுதுரை! இப்படியெல்லாம் அமலி பண்ணிவிடுகிருயே! ஒரு 10 வருடத்திற்கு சமாதானமாக இருக்கலாம்!' என்று என்னைக் கேட்டுக்கொள்வதில் அர்த்தமிருக்கும்.

"நான் வரி கொடா இயக்கத்தைத் துவக்கியவனல்ல; சட்டத்தை மீறச் சொல்லவில்லை. எப்பொழுதும் இப்படி இருப்பேனென்று உறுதியளிக்கவில்லை; இப்பொழுது நாட்டு மக்களை அமளி பண்ணும்படியாக நான் தூண்டவுமில்லை—என்னுடைய கட்சியும் சொல்லவில்லை. ஆகையினுலே, திராவிட முன்னேற்றக் கழகத்தாருக்கும்—சென்னை சர்க்காருக்கும் எந்தவித சங்கடமுமில்லை; எந்த விதமான சண்டையும் எங்களுக்குள்ளே இல்லை. நிதி அமைச்சர் சுப்பிரமணியம், 'நமக்குள்ளே சண்டை எதற்கு? ஒரு 10 வருட காலம் Truce—சமாதானமாக இருக்கலாம்; இந்த 10 வருட காலத்திலே ஒன்ருக சேர்ந்து பணியாற்றி—ஒத்துழைத்து, அதற்குப் பிறகும் தமிழ்நாடு நல்லபடி முன்னேறவில்லை என்று தோன்றினுல்,—அப்படி முன்னேருததற்குக் காரணம் வடநாட்டு சர்க்கார்தான் என்று எனக்கு நிரூபிக்கப்பட்டால், அப்பொழுது நானும் உங்களோடு சேர்ந்து போராடுகிறேன்; அத்தனை பேரும் சேர்ந்தே போராடலாம்—இப்பொழுது வேண்டாம்,' என்று ஒரு 10 வருட தவணை கேட்டார்கள்.

"நான் அவர்களைத் திருப்பிக் கேட்பது நாகரிகமல்லவென்று சும்மாயிருந்தேன்; எனக்கு நானே யோசித்துக்கொண்டேன்—'ஏன் நம்முடைய நிதியமைச்சர் குறிப்பாக ஒரு 10 வருடம கேட்கிருர்' என்று எனக்கு நானே கேட்டுக் கொண்டேன்.

'கொஞ்ச காலத்திற்கு' என்று சொல்லியிருக்கலாம்; 'சில நாளைக்கு' என்று சொல்லியிருக்கலாம்; அல்லது 'இந்தச் சண்டையே வேண்டாம்' என்று வாதாடியிருக்கலாம். ஒரு 10 வருடத்திற்கு' என்று குறிப்பாகச் சொன்னதற்குக் காரணம்—நானுக எண்ணிக்கொண்டேன்—அது சரியோ தவருே, அதை சுப்பிரமணியம் அவர்கள்தான் பின்னுலே திருத்த வேண்டும்—'ஒரு ஐந்து வருடம் இங்கே மந்திரியாக இருந்து விடுகிறேன்; இன்னுெரு ஐந்து வருடம் டெல்லியிலே போய் மந்திரியாக இருக்கிறேன். இந்த 10 வருட காலத்திற்கு தொல்லை கொடுக்காமல் இரு' என்று கேட்டுக் கொள்வதாகத்தான், அந்த '10 வருடம்' எனக்குத் தோன்றிற்று. அதுவே தவிர, '10 வருடம்' என்று சொன்னதற்கு வேறு ஒரு பொருளும் எனக்குத் தோன்றவில்லை"

என்று அண்ணு அவர்கள் 6—7—57 அன்று மாலை கோடம்பாக்கத்தில் நடைபெற்ற தி. மு. கழக 4-வது ஆண்டு விழாவில் பேசுகையில் குறிப்பிட்டார்.

தொடர்ந்து அண்ணு அவர்கள் பேசியதாவது:—

"கர்ப்பிணியாக உள்ள பெண்களுக்கு 'அதிகமான வேலை செய்யாதே—கொஞ்ச காலத்திற்கு சும்மாயிரு' என்று நான் குறிப்பிட்டு, 'அதுவரை ஓய்வெடுத்துக் கொள்ள சொல்வதைப்போல், திராவிட முன்னேற்றக் கழகத்துக்காரர்களைப் பார்த்து, 'ஒரு 10 ஆண்டிற்கு, இந்தச் சண்டையில்லாமல் இருக்கட்டும்' என்று நிதியமைச்சர் கேட்டதற்குக் காரணம், நான் எண்ணிக்கொண்டது இதுதான் — 'இங்கேயும் அங்கேயும் பதவியிலிருந்துவிட்டு பின்னர் நமக்கு என்ன வேலை இருக்கப் போகிறது? அண்ணுதுரையுடன் சேர்ந்து கொள்ளலாம்' என்று எண்ணுகிருரோ என்னவோ! நானுக யூகித்துக் கொண்டேன்;

"இங்கே ஒரு ஐந்து வருடமும், அங்கே ஒரு ஐந்து வருடமும் இருக்க அவர் ஆசைப்படுகிருர் என்று நான் சொல்லவில்லை. உண்மையிலேயே அவர் அதற்குத் தகுதி வாய்ந்தவர் — திறமை வாய்ந்தவர் என்பதை மனப்பூர்வமாக ஒப்புக்கொள்கிறேன்.

"நிதி அமைச்சர் சுப்பிரமணியம் நல்ல சாமர்த்தியம் படைத்தவர். நல்ல சாமர்த்தியம் படைத்தவர் என்று நான் சொல்லுகின்ற நோக்கில், இங்கே கூட்டத்தின் ஓரத்திலே காங்கிரஸ்காரர்கள் இருப்பார்களானுல், 'அப்படியானுல் சுப்பிரமணியத்தை ஏன் எதிர்க்கிருய்?' என்று கேட்கத் தோன்றும் அவர்கள் மனம்—பாவம்!

"சாமர்த்தியம் என்பது எதற்குப் பயன்படுகின்றது — எப்படிப் பயன்படுகிறது என்பதைப் பொறுத்துத்தான், அந்தச் சாமர்த்தியத்தை வரவேற்பதா—எதிர்ப்பதா என்பது அடங்கியிருக்கின்றது.

"எப்படிப்பட்ட 'அலிகார்' பூட்டானுலும் மிகச் சாதாரணமான இரும்புக் கம்பியினுலேயே மிகச் சாமர்த்தியமாக கந்தசாமி திறந்துவிடுவான் என்ருல், கந்தசாமியை ஊரார் கட்டிவைத்து 'இரும்புப் பூட்டுகளை எளிதிலே உடைக்கக் கற்றுக்கொண்ட சாமர்த்தியசாலி நீ, வாழ்க—வாழ்க!' என்று மடல் அளிக்க மாட்டார்கள். சாமர்த்தியசாலி யென்ருல், இரும்புப் பூட்டை உடைத்துவிட்டவனை சாமர்த்தியமாகக் கண்டுபிடிக்கின்ருனே அவனுடைய சாமர்த்தியத்தைத்தான் பாராட்டுவார்கள்.

"அதைப்போல நான், நிதி அமைச்சர் சுப்பிரமணியத்தை, சாமர்த்தியசாலி என்று சொன்னுல், உள்ள நிலைமையை மறைப்பதில் அவர் நல்ல சாமர்த்தியசாலி; நாம் சொல்லாததை சொல்லியதாக எடுத்துவைத்துக் கொண்டு பேசுவதில் அதைவிட சிறந்த சாமர்த்தியசாலி; இருப்பதை மறைப்பதிலும்—இல்லாததை எடுத்துக் காட்டுவதிலும், இல்லாத சண்டையை நினைவுபடுத்திக் கொள்வதிலும் — இருக்கிற சண்டையை மூடிவைப்பதிலும் சிறந்த சாமர்த்தியசாலியாக இருக்கின்ருர்; அதனுல்தான் நான்—'அவர் டெல்லி வரையிலே சென்று பதவி ஏற்பதற்கேற்ற சாமர்த்தியமிருக்கிறது,' என்று குறிப்பிட்டேன்.

(4-ம் பக்கம் பார்க்க.)

## முதல் திட்டத்தின் பலன்?

## ரூ. 530 கோடி மிச்சப்பட்டதாம்!

### மத்திய மந்திரியின் ஏட்டுக் கணக்கு

காடக், ஜூலை 9—

மத்திய கூட்டுறவு மந்திரி டாக்டர் பஞ்சாப் ராவ் தேஷ்முக், முதல் திட்ட காலத்தில் 1,30,00,006 டன் உணவுப் பொருள்கள் அதிகமாக உற்பத்தி செய்யப்பட்டதாகவும், இதனுல் ரூ. 530 கோடிவரை, உணவுப் பொருள் இறக்குமதி செய்யாததினுல் மிச்சப்பட்டதாகவும் கூறியிருக்கிருர்.

சீக்கிரமே உணவுப் பொருள்களுக்கு குறைந்தபட்ச விலை நிர்ணயிக்கப்படும் என்றும், அப்படி நிர்ணயிக்கப்படும் விலை குடியானவர்களைப் பாதிக்காமல் இருக்கவும் நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் அவர் கூறியிருக்கிருர்.

## வருமான வரி இலாகா சுறுசுறுப்பு பெறுகிறதாம்!

## இதுவரை வரி தராமல் ஏமாற்றிய 92,707 பேர் கண்டுபிடிக்கப்பட்டனராம்!

### 1956—57-ல் ரூ. 195 கோடி வசூலாயிற்ரும்!

புதுடில்லி, ஜூலை 9—

1956-57-ம் ஆண்டில் டெல்லி சர்க்கார், வருமான வரி மூலம் மட்டும் ரூ. 195·7 கோடி பெற்றனர் என்றும், இது, வரவு-செலவுத் திட்டத்தில் எதிர்பார்த்த ரூ. 189·6 கோடியைவிட ரூ 6·1 கோடி அதிகம் என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

இந்தத் தொகையில் மாநிலங்களுக்கு சுமார் ரூ. 60 கோடி வரை தந்துவிட்டு டெல்லி, ரூ. 135·7 கோடியை வைத்துக் கொள்ளுமாம்!

வருமான வரி இலாகா இப்போது முன்னைவிட சுறுசுறுப்பாக வேலை செய்வதாகவும் டெல்லி சர்க்காரின் பத்திரிகைக் குறிப்பு கூறுகிறது.

இதுவரை வரிதராமல் ஏமாற்றி வந்த 92,707 பேர்களுக்கு நடைமுறை ஆண்டில் வரி விதிப்பு அமுல் செய்யப்படுவதாகவும் குறிப்பு கூறுகிறது.

## பாதிவிலையில் பல்கலைக் கழக பாடபுத்தகங்கள்!

### மானியக் குழுத் தலைவர் தகவல்

சென்னை, ஜூலை 8—

"பல்கலைக் கழக மாணவர்களுக்கு, அவர்கள் இப்போது தந்துவரும் விலையில் பாதி மட்டுமே தந்து பாடப் புத்தகங்களைப் பெற்றுக்கொள்ளும் வகையில் டில்லி சர்க்கார் ஏற்பாடு ஒன்று செய்துவருகின்றனர்"

என்று, பல்கலைக் கழக மானியக் கமிஷன் தலைவர் சி. டி. தேஷ்முக் கூறியிருக்கிருர்.

நம் நாடு
தி.மு.க.தினஇதழ் ஆசிரியர் இரா.நெடுஞ்செழியன்
சென்னை 8—7—57 செவ்வாய்

# கடமையாற்றுவீர்

டெல்லி சர்க்காரின் புதிய வரி விதிப்புத் திட்டங்களில் மிகப் பெரும்பாலானவை ஏழை-எளிய-நடுத்தர மக்களையே வெகுவாகப் பாதிக்கும் என்ற உண்மையை வரி விதிப்பினை உத்தேசித்துள்ள நிதி மந்திரியே ஒப்பியிருக்கிறார்.

இந்த வரிவிதிப்பிற்கு எதிராக எழுந்த கண்டனங்களைச் சமாளிப்பதற்கு—ஆவேசமான தாக்குதல்களைத் தாங்கிக்கொள்வதற்கு டெல்லிப் பெரியவர்கள், ஐந்தாண்டுத் திட்டத்தைத்தான் 'கேடய'மாக வைத்திருக்கின்றனர்.

எல்லா 'அகில இந்தியா'க்களின் கண்டன முழக்கங்களும், இந்தக் 'கேடய'த்தின் முன் கூர் மழுங்கிவிடுவதை நாம் காண்கிறோம்.

தமிழகத்தைப் பொறுத்த வரையில், திராவிட முன்னேற்றக் கழகம்தான் இன்னும், தனது எதிர்ப்பிற்காகக் காட்டிய காரணங்களுக்குப் பதில் பெறாமல் இருக்கிறது.

எந்த ஐந்தாண்டுத் திட்டத்தினைக் காட்டி, இந்தக் கொடிய வரிவிதிப்புகளை நியாயப்படுத்த முயற்சிக்கிறார்களோ டில்லிப் பெரியவர்கள், அந்த ஐந்தாண்டுத் திட்டத்தில், தென்னக மக்கள் அநியாயமாக வஞ்சிக்கப்பட்டிருக்கிறார்கள் — கொடுமைகளுக்கு ஆளாக்கப்பட்டிருக்கிறார்கள்.

தங்களது வாழ்வில் கடுகளவு மகிழ்ச்சியைக் கொணரவோ, தங்கள் சந்ததியின் எதிர்காலத்தைத் துளியேனும் பிரகாசமானதாக்கவோ, உறுதிமிக்கதாக்கவோ பயன்படப் போவதில்லை என்ற இலட்சணத்தில் உள்ள ஒரு திட்டத்திற்காக, ஏற்கனவே கொடுமைக்காளாகியுள்ள தென்னக மக்கள், மேலும் புதிய வரிக் கொடுமைகளைத் தாங்கிக்கொள்ளவேண்டுமென்பது, அநீதியின் உச்சமாகும் என்று நாம் விளக்கி வந்திருக்கிறோம்.

நமது இந்த நியாயமான எதிர்ப்பிற்கு இதுவரை டெல்லிப் பெரியவர்கள் பதில் ஏதும் தரவில்லை என்பதே, அவர்களால் நமது குற்றச்சாட்டுகளை மறுக்க இயலாதிருக்கும் நிலையைப் பட்டவர்த்தனமாக்குகின்றது.

புதிய வரி விதிப்புகளை எதிர்ப்பதற்குரிய இந்தத் தனிக் காரணத்தை மூடி வைத்துவிட்டு, டெல்லியின் வரி விதிப்புகளைக் கண்டிக்க முன்வரும் எவரையும் போலிகள் என்றே இந்த நாட்டு மக்கள் கருத இடமுண்டு.

திராவிட முன்னேற்றக் கழகம், தனித்து நின்று வரி விதிப்பினை எதிர்த்துக் குரல் எழுப்ப வேண்டியுள்ள ஒரு நிலை உருவாவதற்குள்ள காரணம் எல்லாம், இந்த நாட்டில் உள்ள 'அகில இந்தியா'க்கள், தங்களின் கட்சி நலன் என்ற குறுகிய பார்வையில், தென்னக மக்களின் நலன்களை மறந்துவிடுகிறார்கள் அல்லது அலட்சியப்படுத்திவிடுகிறார்கள் என்பதுதான்!

தென்னக மக்களுக்கு துளியும் உருவான பலன் தராத திட்டம் ஒன்றிற்காக, அவர்கள் மேலும் மேலும் வரிச் சுமைகளைத் தாங்கிக்கொள்ள வேண்டியிருப்பது, அவர்கள் 'அகில இந்தியா' என்ற அரசியல் அமைப்பில் பிணைக்கப்பட்டிருக்கும் 'பாவ'த்தினால் தானே! 'அகில இந்தியா' என்ற ஏகாதிபத்திய அரசியல் அமைப்பில் சிக்கிக் கிடக்கும் அந்தப் 'பாவ'த்திற்காக, தங்கள் நலன்களை வடவரின் வாழ்வு வளம் பெறுவதற்காகத் தியாகம் செய்துவிட வேண்டும் என்று 'அகில இந்தியா'க்களின் 'பரந்த மனம்' கருதுகின்றதா?

இல்லையென்றால் கண்ணைப் பறிக்கும் இந்த அநியாயத்திற்கு எதிராகப் புருவத்தை உயர்த்தக்கூட அவர்கள் தயங்குவானேன்?

இந்தக் கேள்வியையும்தான், நேற்று முன்தினம், நாடெங்கிலும் தி. மு. கழகத்தின் தலைமையில் திரண்டெழுந்து, டெல்லியின் வரிவிதிப்புகளுக்கு எதிராக இலட்சோப இலட்சம் மக்கள் எழுப்பிய கண்டன முழக்கம் உள்ளடக்கிக்கொண்டிருக்கிறது.

நமது பொதுச்செயலாளர் அவர்களின் அறிக்கைக்குஒப்ப, தலைநகரிலும், மற்றும் தமிழ் நாட்டின் பல ஊர்களிலும், 'டெல்லி வரிவிதிப்பு: பாராளுமன்ற உறுப்பினர்களிடம் முறையிடும் நாள்' வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டிருக்கிறது.

தலைநகரில் சென்னை மாவட்டத் தி. மு. கழகத்தினர், பல்லாயிரம் மக்களைத் திரட்டி, வட சென்னை — தென் சென்னை பாராளுமன்ற உறுப்பினர்களிடம், ஊர்வலமாகச் சென்று, வரிவிதிப்புகளுக்கு எதிராகப் போராடுமாறு முறையிட்டுள்ளனர்.

தென் சென்னை பாராளுமன்ற உறுப்பினரான டி. டி. கிருஷ்ணமாச்சாரி அவர்களே நிதி மந்திரியாகவும் இருப்பதால், அவரது அந்தரங்கச் செயலாளர் மூலம் தரப்பட்ட முறையீட்டு நகலில், 'ஏழை எளியோரை வாட்டி வதைக்கும் புதுவரி விதிப்புகளைக் கைவிடுக' என்று கேட்கப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள எம்.பி.-க்கள்—அவர்கள் எந்தக் கட்சியினராயினும், தென்னக மக்களுக்குப் புதிய வரி விதிப்புகள் இரட்டை அநீதி இழைப்பவை என்பதைச் சுட்டிக் காட்டி, அவ் வரி விதிப்புகளுக்கு எதிராகப் பாராளுமன்றத்தில் போராட வேண்டும் — கடமையைச் செய்யவேண்டும் என்று வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறோம்.

அறிக்கைக்கு இணங்க ஊர்வலங்களும், பொதுக்கூட்டங்களும் நடத்தி, கண்டனம் முழக்கி, பாராளுமன்ற உறுப்பினர்களிடம் முறையிடும் நாளைச் சிறப்பாக நடத்தி முடித்த கழகத் தோழர்கள் அனைவரும் நமது நன்றிக்கும் பாராட்டுதலுக்கும் உரியவர்களாவர்.

# 'நிலச் சீர்திருத்தக் கொள்கை விவசாயிகளுக்கு பயனளிக்கவில்லை'

## 'நிலவுடைமையைக் கட்டுப்படுத்தாதது ஏன்?'

### சென்னை சட்டசபையில் எஸ்.எம்.அண்ணாமலை, ஏ. கோவிந்தசாமி, எம். பி. சுப்பிரமணியம், சி. நடராசன் ஆகியோர் முழக்கம்

சென்னை, சூலை 6—

நிலவரி இலாகாவுக்கு ரூ. 96,95,600 அனுமதிக்க வேண்டுமென்று ரெவினியூ அமைச்சர் மாணிக்கவேலர் கோரியபோது, மானியத்தில் ரூ. 100 குறைக்க வேண்டுமென்று வெட்டுப் பிரரேபணை கொண்டுவரப்பட்டது. அந்தப் பிரரேபணைமீது கழக உறுப்பினர்கள் எஸ். எம். அண்ணாமலை, சி. நடராசன், ஏ. கோவிந்தசாமி, எம். பி. சுப்பிரமணியம் ஆகியோர் பேசினர்.

தோழர் எஸ். எம். அண்ணாமலை அவர்கள் பேசியதாவது:—

"வெட்டுப் பிரரேபணையின் மீது என்னுடைய கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புகிறேன். எனது தொகுதியின் சார்பில மக்களின் கையொப்பங்களுடன் அமைச்சரிடம் ஒரு மனு கொடுத்துள்ளேன் என்பது அமைச்சருக்கே தெரியும். அதிக 'வாரம்' கோரி என்னுடைய பகுதியிலுள்ள மக்கள் ஒருமுகமாகக் கிளர்ச்சியும் செய்துள்ளார்கள்; ஆனால், இதுவரை மக்கள் குறைகளைக் கவனிக்க அரசாங்கம் முன்வரவில்லை. ஒரு ஏக்கருக்கு ரூ.351 சாதாரணமாகச் செலவிட வேண்டியுள்ளது. 4 மாதகாலத்தில் கிடைப்பதெல்லாம் ரூ. 390 12 தான். ஒரு விவசாயிக்கு மாதம் சராசரி வருமானம் ரூ. 9—15—0; அதாவது, ஒரு நாளுக்கு 5 அணா 4 பைசா ஆகும். இதைக்கொண்டு ஒரு விவசாயி, அவன் மனைவி அவனுடைய குழந்தைகள், இரண்டு மாடுகள் எப்படி வாழ முடியும்? இதனால் அவன் கடனைத் தீர்க்க மாட்டையும் விற்கவேண்டியுள்ளது. நியாயவார மசோதா விவசாயிக்குப் பயன்தரவில்லை. இப்போது குத்தகைக்காரனுக்குத்தான் பயன்படுகிறது. வாரம் உயர்த்தப்பட வேண்டும். முதலில் விவசாயி யார் என்பதை நிர்ணயிக்க வேண்டும். நேரடியாக ஏர் பிடித்து, கவலையடித்து, விதை தூவி, களையெடுத்து பயிர் வைப்பவனைத்தான் விவசாயி என்று பொருள்படக் கொள்ளவேண்டும் அப்போதுதான் இந்தச் சட்டம் அவனுக்குப் பயன்படும்.

"சட்டம் இரகசியமாகச் செய்யப்படவேண்டும். அதைவிடுத்து, 'புலி வருகிறது,' என்று விளம்பரப்படுத்துவதினால் அந்தப் புலி யாரைக் கொல்லவேண்டுமோ அவனைக் கொல்லாமல், அவனைத் தப்பிக்கவைத்து, பாமர மக்களை நாசப்படுத்தப் பயன்படுகிறது. நிலவுடைமைக்கு ஒரு வரம்பு ஏற்படுத்தவேண்டும். இப்போது ஏராளமான விவசாயிகளை நிலத்திலிருந்து வெளியேற்ற சட்டம் இடம் கொடுக்கிறது.

"இதற்கெல்லாம் ஏற்ப சட்டங்களைக் கொண்டுவரவேண்டும் இதற்கிடையில், விவசாயிக்குப் பயன்படும் வகையில் உடனடியாகப் பாதுகாப்பு அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்."

தோழர் சி. நடராசன் அவர்கள் கூறியதாவது:—

"என் அனுபவத்தைக்கொண்டு சில வார்த்தைகள் கூறவிரும்புகிறேன். ஒரு ஏழை விவசாயி தன் நிலத்துக்கு 5 அணா கிஸ்தியைக்கூட கட்டமுடியாமல் பல ஆண்டுகள் கஷ்டப்பட்டிருக்கிறான் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். எனவே, 5 ரூபாய்க்கு குறைவாக வரி செலுத்தவேண்டிய விவசாயிகளுக்கு விலக்கு அளிக்கவேண்டும். இந்த நில வருமானத்தைக் கொண்டுதானே கலவியையும், தொழிலையும் அளிக்கவேண்டும் என்று கூறலாம். ஆனால், ஏழை விவசாயிகள் இதனால் பாதிக்கப்படுகிறார்கள் என்று உணர்ந்து, அந்தச் சிறு விவசாயிகளுக்கு விலக்களிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

"விவசாய வருமானத்தின் மீது வரி விதிப்பதின் மூலமும், நில வரம்புக்கு உயர்வரம்பு ஏற்படுத்துவதின் மூலமும் அதிக உற்பத்தியையும், மகசூலையும் காணமுடியும். புறம்போக்கு தரிசு நிலங்களை நிலமில்லாதவர்களுக்கு வழங்குவதின் மூலம் உற்பத்தியைப் பெருக்கலாம். இப்போது தரப்படும் நிலங்கள் ஓராண்டு காலத்திற்கே தரப்படுகிறது. எனவே, இந்தக் காலம் முடிவடைந்தவுடன் மீண்டும் நிலத்தைப்பெற விவசாயிகளுக்கு வீண் தாமதமும், தொல்லைகளும் இடையூறுகளும் ஏற்படுகின்றன. சுமார் 10 ஆண்டுகளுக்காவது விவசாயிகளுக்கு சாகுபடி செய்ய உரிமை அளிக்கவேண்டும்.

"உண்மையான நிலச் சொந்தக்காரர்களைக் கண்டுபிடிப்பதில் இப்போது பல சங்கடங்கள் உள்ளன. சாகுபடி செய்பவர்களுக்கு 'பட்டா' பதிவுசெய்து தருவதில் அதிக தாமதம் ஏற்படுகிறது.

"கிராம அதிகாரிகளுக்கு திடீர் திடீர் என்று தாக்கீதுகள் வருகின்றன. அவர்கள் நாள் முழுவதும் வேலை செய்கிறார்கள். உதாரணத்துக்கு ஒன்று சொல்லுவேன்; 24 மணி நேரத்திற்குள் கிராமத்தில் எத்தனை ஆடுகள் இருக்கின்றன என்று கணக்கெடுத்துக் கூறவேண்டும் என்றும், இப்படிப் பலப்பல வேலைகளும் தரப்படுகின்றன. எனவே, கிராம ஊழியர்களை முழு நேர ஊழியர்களாக ஏற்று தக்க ஊதியம் தரப்பட வேண்டும்.

"வெள்ளைக்காரன் காலத்தில் இருந்த முறையிலேயே இன்றும் தஸ்தாவேஜுகள் வைக்கப்பட்டு வருகின்றன. இதைப் பரிசீலனை செய்து அவசிய மற்றவைகளை நீக்கி வேலைப்பளுவைக் குறைக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்"

தோழர் ஏ. கோவிந்தசாமி அவர்கள் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"நிலச் சீர்திருத்தம் மிகவும் முக்கியமானது. சீனா போன்ற நாடுகளிலும், காஷ்மீரிலும் நிலச் சீர்திருத்தம் செய்ததின் விளைவாக நல்ல பயன் ஏற்பட்டுள்ளது.

"இங்கு, சட்டம் கொண்டு வருவதற்கு முன்னரே 'சட்டம் வருகிறது—சட்டம் வருகிறது,' என்று முன்னறிவிப்பு செய்ததன் காரணமாக, நிலச் சுவான்தார்களை எச்சரித்து அவர்கள் தப்பித்துக்கொள்ள வழி செய்ததாக நான் குற்றம் சாட்டுகிறேன். அப்படி, 'சட்டம்வரும்,' என்று கூறியவர்கள், சட்டத்தைச் சரிவர கொண்டு வந்தார்களா என்றால், இல்லை.

"சட்டத்தைப் படிப்படியாகக் கொண்டுவர உத்தேசித்து, 60, 40 சத விகிதத்தில் நியாயவாரம் போன்ற சட்டங்களைக் கொண்டு வந்தனர்.

"நிலவுடைமைக்கு உச்சவரம்பு நிர்ணயிக்க அரசாங்க முன்வரவில்லை; ஏன் தயங்குகிறார்கள் என்பதும் புரியவில்லை. தேர்தல் நேரத்தில் நிலச்சுவான்தார்கள் காங்கிரசை எதிர்த்துத் தனிக் கட்சி அமைத்து, போட்டியிட்டார்களே என்று அஞ்சுகின்றனரா? நேற்றுகூட கனம கக்கன் இதைப் பற்றி அவையில் குறிப்பிட்டார்கள்.

"ஆனால், மக்களுக்குத் தேவையான நல்ல காரியங்களைச் செய்ய நல்ல அரசாங்கம் எப்போதும் தயங்கக் கூடாது. மத்திய அர

(-ம்3 பக்கம் பார்க்க.)

## கைத்தறி நெசவாளர்களுக்கு குடியிருப்பு வசதியாம்!

### டில்லியின் திட்டத்தின்கீழ் காலனிகள் அமையுமாம்

### தமிழ் நாட்டிற்குக் கிடைக்கும் உதவியின் இலட்சணம்

புதுடில்லி சூலை 8—

கைத்தறி நெசவாளர்களுக்கான நான்கு குடியிருப்பு வசதிக் காலனிகளை ஏற்படுத்துவதற்கான திட்டங்களுக்கு இந்திய சர்க்கார் அங்கீகாரமளித்துள்ளனராம்!

தொழிலாளரின் வாழ்க்கை நிலைமைகளை அபிவிருத்தி செய்வதற்கான திட்டத்தின் ஒரு பகுதியாகவே இந்த உதவி அளிக்கப்படுகிறதாம்.

தமிழ் நாட்டிற்கான இரண்டு திட்டங்களின்கீழ், சேலம் மாவட்டத்திலுள்ள திருச்செங்கோட்டில் ஒரு காலனியும், இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள ஸ்ரீவில்லிபுத்தூரில் ஒரு காலனியும் ஏற்படுத்தப்படும்; அவை ஒவ்வொன்றிலும் 100 வீடுகள் இருக்கும்.

ஒவ்வொரு வீட்டுக்கும் நிர்மாணச் செலவு வரம்பு ரூ. 3,000 ஆக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது; கட்டிடச் செலவு முழுவதையும் இந்திய சர்க்கார் ஏற்றுக்கொள்வார்களாம்!

இந்தத் தொகை மூன்றில் இரண்டு பங்கு கடனாகவும், ஒரு பங்கு உதவித் தொகையாகவும் இருக்குமென்றும், தண்ணீர் வசதி, சாக்கடை வசதி முதலிய இதர வசதிகளையும் மத்திய சர்க்கார் செய்துகொடுப்பார்களென்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

## ரூ. 8 கோடி செலவில் நீர்ப்பாசன வசதி

### 39 இலட்சம் ஏகராவுக்கு அளிக்கப் பட்டுள்ளதாம்

புதுடில்லி, சூலை 8—

சமூகநல, தேசீய அபிவிருத்தித் திட்டங்களின்கீழ், சிறிய நீர்ப்பாசனத் திட்டங்கள் மூலம் நான்காண்டுக் காலத்தில் 39 இலட்சம் ஏக்கர் நிலத்திற்கு நீர்ப்பாசன வசதி அளிக்கப்பட்டிருப்பதாகவும், இத்திட்டங்களுக்கு ரூ. 8 கோடி செலவழிக்கப்பட்டுள்ளதென்றும் செய்தியொன்று தரப்பட்டிருக்கிறது.

## ரூ. 20 இலட்சம் செலவில் கோவையில் விமான நிலையம் ஏற்படுமாம்

கோவை, சூலை 5—

புதுமுறையான விமான நிலையம் ஒன்று இங்கு ரூ. 20 இலட்சம் செலவில் உருவாகிவருகிறதாம். இதன் உருவக வேலை இன்னும் 18 திங்கள்களில் முடிவடையுமாம் இதன் பின்னர் விமான நிலையம் மிகவும் உயர்ந்ததாக காட்சிதருமாம்!

One side of the page is dark



# இலங்கையிலிருந்து துரத்தப்படும் தமிழர்கள்

## புதுவாழ்வுபெறுவதுபற்றி கழக உறுப்பினர்கள் எழுப்பிய சரமாரியான கேள்விகள்

### சட்டசபையில் மந்திரி பக்தவத்சலம் திணறல்

சென்னை, சூலை 7—

"பச்சைத் தமிழர் ஆட்சி இங்கு நடைபெறும் இந்த நேரத்தில், இலங்கையில் பழந் தமிழர்கள் அவதிப்படுகிறார்களே, அவர்களுக்கு ஆறுதல் சொல்ல முதன் மந்திரி காமராசர் இலங்கை செல்வாரா?"

என்று தோழர் ஏ. கோவிந்தசாமி அவர்கள் நேற்று சட்டசபையில் கேள்வி ஒன்று எழுப்பினர்.

பதிலளித்த மந்திரி பக்தவத்சலம், 'முதன் மந்திரி அங்கு போக வேண்டிய அவசியமில்லை' என்று கூறினாராம்.

முதலில் வேறொரு உறுப்பினரின் கேள்விக்குப் பதிலளிக்கும்போது, கடந்த 15 மாத காலத்தில் 13,976 தமிழர்கள் இலங்கையிலிருந்து தாயகம் திரும்பியதாகவும் மந்திரி கணக்கு தந்திருக்கிறார்.

"பாகிஸ்தானிலிருந்து ஓடிவந்த அகதிகளுக்குச் செய்யப்பட்ட உதவி போல இலங்கையிலிருந்து திரும்புகிறவர்களுக்கும் உதவி செய்யப்படுமா?' என்று தோழர் க. அன்பழகன் கேட்டார்.

இதேபோல தோழர் எஸ். பி. ஆதித்தனும் கேட்டார்.

இவற்றிற்குப் பதிலளிக்கையில் மந்திரி, 'இலங்கையிலிருந்து வந்த தமிழர்களுக்கு உதவி செய்வது பற்றி விசேட அதிகாரி சில சிபாரிசுகளை வெளியிட்டிருக்கிறார்; அந்தச் சிபாரிசுகளைப் பரிசீலனை செய்துவருகிறோம்' என்று கூறியிருக்கிறார்.

"வடநாட்டிற்கு ஓடிவந்தபாகிஸ்தான் அகதிகளுக்கு அரசாங்கம் பெரிய வீடுகள் கட்டிக் கொடுத்துக் குடியேற்றி, அவர்கள் நல்வாழ்வுக்காகப் பெரிய தொழில் நிறுவனங்கள் நிறுவிக் கொடுத்தது இந்த அரசாங்கத்திற்குத் தெரியுமா?"

என்று தோழர் க. அன்பழகன் கேட்டிருக்கிறார்.

இதற்கு மந்திரி, 'மற்ற மாநிலங்களில் நடைபெறுவது பற்றி, எனக்கு அவ்வளவாகத் தெரியாது; இங்குகூட சில வடநாட்டு அகதிகள் உள்ளனர். அவர்கள் அரசாங்க உதவி பெறுவது ஒருபுறமிருக்க, ஆற்றல் காரணமாக அந்த அகதிகள் முன்னுக்கு வந்துவிடுகிறார்கள். இதைக் கவனிக்காமல், அரசாங்கத்தின்மீது புகார் கூறிப் பயன் இல்லை' என்று கூறினாராம்!

"இலங்கை அகதிகளுக்காக திருநெல்வேலியிலாவது, இராமநாதபுரத்திலாவது சர்க்கார் ஒரு பெருந்தொழிலைத் துவக்குமா?"

என்று, தோழர் க. அன்பழகன் மந்திரியை மடக்கினர்.

மந்திரியோ, 'அகதிகள், இராமநாதபுரம், திருநெல்வேலி, தஞ்சை, திருச்சி ஆகிய மாவட்டங்களில் சிதறிக்கிடக்கிறார்கள்; இவர்களை ஒன்று சேர்ப்பது கஷ்டம்; எனவேதான், ஆங்காங்கே சிறு தொழில்களில் இவர்களை ஈடுபடுத்த வேண்டுமென சர்க்கார் விரும்புகிறது' என்று கூறியிருக்கிறார்.

"திருச்செந்தூர் தாலுகாவில், 9,943 இலங்கை அகதிகள் இருப்பதால், அங்கு கூட்டுறவு முறையில் ஒரு ஆலை துவங்க சர்க்கார் முன்வருமா?"

என்று தோழர் செல்வராசன் கேட்டபோது, மந்திரி, 'இந்தப் புள்ளிவிவரம் சரியானதல்ல; திருச்செந்தூர் மக்கள், அப்படி ஒரு ஆலை துவங்குமாறு, சர்க்காரைக் கேட்கவில்லை' என்று கூறியிருக்கிறார்.

# நிலச் சீர்திருத்தக் கொள்கை......

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

சாங்கம்கூட இத்தாமதத்திற்குக் காரணமாக இருக்கலாம்; 'அகில இந்திய அடிப்படையில் சட்டம் உருவாக்கப்படுகிறது', என்று கூறலாம்; ஆனால் தாமதித்து சட்டம் கொண்டு வருவதில் பயன் இல்லை.

"நிலவுடைக்கு நிச்சயமாக ஒரு வரம்பு ஏற்படுத்தப்பட வேண்டும். அதுமட்டுமல்ல; மடாலயங்களுக்குச் சொந்தமான நிலத்தை அரசாங்கம் கைப்பற்ற வேண்டும் அதை மக்களுக்குப் பயன்படச் செய்யவேண்டும். உண்மையான விவசாயிகளுக்கு அந்த நிலத்தைப் பகிர்ந்து தரவேண்டும். இதற்கு நல்ல எதிர்க்கட்சிகளும், முற்போக்குக் கருத்து கொண்டவர்களும் தடையாக நிற்கமாட்டார்கள்; மாறாக அரசாங்கத்தைப் போற்றி வரவேற்பார்கள். ஆண்டவனும் கோபப்பட மாட்டார்—அவருக்கு ஏன் அதிக நிலம்? அவருக்கும், அளவு ஏற்படுத்துவதைப் பற்றி கோபம் வராது. மக்களை காக்கத்தானே அவருடைய நிலம் பயன்படுகிறது?

"'கல்பட்' பற்றி சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். அங்குள்ள ஆதிதிராவிட மக்கள் கட்டாயப்படுத்தி அப்புறப்படுத்தப்படுகின்றனர். இதைப் பற்றி அமைச்சர் கவனித்து தக்க உதவி செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

"நெய்வேலி பகுதியில் 22 கிராமங்களிலிருந்து குடியானவர்கள் வெளியேற்றப்படுகின்றனர்.

"அங்குள்ள நிலத்தை அரசாங்கம் எடுத்துக்கொள்ளும்போது போதிய ஈடு தொகை தருவதில்லை; ரூ. 1,000 மதிப்புள்ள நிலத்திற்கு ரூ. 250 மட்டுமே ஈடு தொகை தரப்படுகிறது.

"கிராம ஊழியர்களுக்குத் தரப்பட்டுள்ள ஊதிய உயர்வு போதுமானதல்ல; அவர்கள் நடத்திய கிளர்ச்சியில் ஈடுபட்டவர்களில் சுமார் 300 பேர்கள் மீது மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது. அதை அரசாங்கம் வாபஸ் பெற வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்."

தோழர் எம். பி. சுப்பிரமணியம் அவர்கள் பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"நமது மாநிலத்தில் நிலத்தை அரசாங்கம் விநியோகித்துள்ளது இருந்தும் 20,000 ஏக்கர் நிலத்திற்குமேல் இன்னும் சாகுபடி செய்யாமல் இருக்கிறது. கேட்டால், 'கூட்டுப் பண்ணைகள் ஏற்படுத்துவதற்காக அதை வைத்துள்ளோம்,' என்று கூறுகிறார்கள்.

"சேலம் மக்கள் அரசாங்கத்தின்முன் வைத்த திட்டங்கள் இதுவரை அமுலாக்கப்படவில்லை. கூட்டுப்பண்ணை விவசாயத்திற்கு அரசாங்கம் நிலத்தை விநியோகிக்க முன்வரவேண்டும்.

"மக்களாகவே கூட்டுறவு முறையில் விவசாயம் செய்ய முன்வரமாட்டார்கள்.

"நிலமில்லாத விவசாயிகளை ஒன்றாகச் சேர்த்து, கூட்டுப் பண்ணைகளை ஏற்படுத்த உதவியளிக்கவேண்டும். சென்ற ஆண்டின் அரசாங்க தணிக்கை அறிக்கையில் 'டிராக்டர்'கள் 'புல்டோசர்'கள் எல்லாம் பயன்படுத்தப்படாமல் உள்ளது என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த இயந்திரங்களைக் கூட்டுப்பண்ணை விவசாயத்திற்குப் பயன்படுத்தவேண்டும்.

"மதுவிலக்குச் சட்டத்தின்கீழ் தண்டிக்கப்பட்டவர்களைக் கூட்டுப்பண்ணை விவசாயத்திற்குப் பயன்படுத்தவேண்டும் என்ற சேலம் மக்களின் திட்டத்தை அமுலாக்கவேண்டும்.

"நிலத்தை அளிப்பதோடு விவசாயத்திற்கான மற்ற வசதிகளையும் தேவைப்படும்போது தாமதமில்லாமல் செய்து தரவேண்டும். எனக்கு தெரிந்தவரையில் 3 ஆண்டுகளுக்கு முன் கொடுத்த நிலம் இன்னும் நல்ல பயனை பல இடங்களில் அடையவில்லை.

"கிணறு தோண்டுவதற்குத் தரப்படும் பணம் திரும்பச் சில சமயங்களில் வசூல் செய்யப்படுகிறது; எவ்வளவு தோண்டியும் தண்ணீர் கிடைக்கவில்லை என்றால் என்ன செய்வது? அதனால் கிணறு தோண்டுவதற்காக முயற்சி செய்திருப்பது தெரிந்தால், அவர்களிடம், கிணறு தோண்டத் தரப்பட்ட பணத்தை வசூலிக்கக் கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன்"

## அமைச்சர் பதில்

"விவாதத்திற்குப் பதிலளிக்கையில் அமைச்சர் மாணிக்கவேலர், வரிவிதிப்பை மாற்றியமைப்பதுபற்றி ஆராய நியமிக்கப்பட்ட குழுவும், வரி விசாரணைக் குழுவும், தற்போது உள்ள முறையை மாற்றுமாறு கூறவில்லையென்றார். நாட்டில் சிறு பட்டாதார்கள்தான் அதிகம் என்றும், ரூ. 100-க்கு மேல் வரி தருபவர்களின் எண்ணிக்கை 39,794 என்றும் இப்போது அரசாங்கத்திற்கு ரூ. 6 கோடி வருமானம் கிடைக்கிறது என்றும், மாநிலத்தில் உள்ள புறம்போக்கு நிலம் கால்நடை அபிவிருத்திக்காக வைக்கப்பட்டுள்ளது என்றும் கூறினர்.

நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டு வரும்போது, நிலவுடைமை பற்றியும் சட்டம் வருமென்றும், கிராம ஊழியர்களின் ஊதிய உயர்வின் காரணமாக அரசாங்கத்திற்கு ரூ. 30 இலட்சம் அதிகம் செலவாகிறதென்றும் கூறினர்.

வெட்டுப் பிரரேபணை மீது வாக்கெடுப்பு நடைபெற்றது. ரெவின்யூ அமைச்சரின் மானியக் கோரிக்கை நிறைவேற்றப்பட்டது.

## காரணமென்ன?

புதுடில்லி, சூலை 8—

கேரளக் கம்யூனிஸ்டுக் கட்சியைச் சேர்ந்த வாசு பிள்ளை என்பவரின் தூக்குத் தண்டனையை இந்தியக் குடியரசுத் தலைவர் ஆயுள் தண்டனையாக மாற்றியுள்ளார்.

குற்றம் நடைபெற்று மூன்றாண்டுகளாகியதுமே, மரண தண்டனை விதித்து ஒன்றரை ஆண்டுகளாகியதும் இவ்வாறு 'கருணை' காட்டுவதற்கும் போதிய காரணமாகக் கருதப்பட்டதாகத் தெரியவருகிறது.

## நல்ல முடிவு?

திருவனந்தபுரம், சூலை 8—

ஆண்டிற்கு ரூ. 1,200-க்குக் குறைவாக வருமானமுள்ளவர்களின் குடும்பத்தைச் சேர்ந்த மாணவர்களுக்கு 4-வது பாரத்தில் இலவசக் கல்வி அளிக்க வேண்டுமென எல்லா உயர்நிலைப் பள்ளிகளுக்கும் கேரள சர்க்கார் உத்திரவிட்டுள்ளதாகவும், ஆனால் விசேடக் கட்டணங்களை மட்டும் மாணவர்கள் செலுத்தவேண்டியிருக்குமென்றும் தெரியவருகிறது.

## கைவிடப்பட்டதாம்!

நிரந்தரமான 'டெலிவிஷன்' நிலையமொன்றை பம்பாயில் ஏற்படுத்த டில்லிப் போரசு முடிவு செய்திருந்ததல்லவா?

இப்போது இத்திட்டத்தை மத்திய வானொலி இலாகா கைவிட்டுவிட்டதாம்! காரணம் சிக்கன நடவடிக்கையைத் தழுவியதுதானாம்!

## கெய்ரோவில் அணுசக்தி நிலையம் உருவாகியதாம்!

எகிப்து நாட்டிலுள்ள கெய்ரோவில், ரஷ்யாவின் உதவியுடன் நிர்மாணிக்கப்பட்டுவரும் முதல் அணுசக்தி நிலையம் பெரும் அளவில் முடிந்துவிட்டதாகச் செய்திகள் கூறுகின்றன.

## தில்லை-வில்லாளன் சுற்றுப்பயணம்

★

### பெருமாத்தூர் :

9—6—57 காலை 10 மணியளவில், உள்ளூர் கழகச் செயலாளர் திரு. ராஜா அவர்களின் திருமண விழா, தோழர் சி. பி. சிற்றரசு தலைமையில் நடந்தது. திருமண நிகழ்ச்சியை தோழர் ஏ. கோவிந்தசாமி எம்.எல்.ஏ. அவர்கள் நடத்தி வைத்தார். தோழர் தில்லை-வில்லாளன் மணமக்களை வாழ்த்தினர்.

அன்று மாலை பெருமாத்தூர் கடைத் தெருவில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர் தில்லை-வில்லாளன் தலைமை வகித்து, மத்திய சர்க்கார் விதித்த வரிகளை எதிர்த்து தி.மு. கழகம் எடுத்துள்ள நடவடிக்கைகளை விளக்கினர்.

பிறகு, தோழர் சி. பி. சிற்றரசு நீண்டதொரு உரை நிகழ்தினர்.

கூட்டத்தில் கேள்வி கேட்டும், கூச்சல் எழுப்பியும் குழப்பம் விளைவிக்க முயன்றவர்கள் தோல்வி கண்டு திரும்பினர். கூட்டம் அமைதியாக இரவு 10 மணிவரை நடந்தது.

### எருக்கூர் :

16—6—57 காலை 10 மணியளவில், எருக்கூரில் தோழர் மாரியப்பன் திருமணம் தோழர் தில்லை-வில்லாளன் தலைமையில் சிறப்பாக நடந்தது. தோழர் கிருட்டிணமூர்த்தி எல்லோரையும் வரவேற்றார். சீர்காழி தோழர் இராமசாமி வாழ்த்துரை கூறினர்.

### குரவப்புலம் :

29—6—57 அன்று குரவப்புலத்தில் இரவு 9-30 மணிக்கு பொதுக்கூட்டம் நடந்தது. தோழர் தில்லை-வில்லாளன் 2½ மணி நேரம் வரை கழகக் கொள்கைகளை விளக்கிப் பேசினர். இரவு 12 மணிக்கு கூட்டம் முடிந்தது.

### மேட்டுநீரேத்தான் :

3—7—57-ல் சோழவந்தான் அடுத்த மேட்டு நீரேத்தானில் காலை 10-30 மணியளவில் தோழர் காசி—தோழியர் இராசாமணி திருமணத்தில் தோழர் தில்லை-வில்லாளன் கலந்து மணமக்களை வாழ்த்திப் பேசினர்.

அன்று இரவு 7 மணியளவில் நடந்த பொதுக்கூட்டத்தில் தோழர் கருப்பையா தலைமை வகித்தார். தோழர்கள் மன்னுடி மங்கலம் நெடுஞ்செழியன், சோழவந்தான் வேலன், செல்லத்துரை, வி. சி. கிருட்டிணன் ஆகியோர் பேசிய பிறகு தோழர் தில்லை-வில்லாளன் 'சட்டமன்றத்தில் தி. மு. க.' என்ற தலைப்பில் உரையாற்றினர். இரவு 9 மணிக்கு கூட்டம் இனிது முடிவுற்றது.

விஷ ஜுரத்தினால் பாதிக்கப்பட்டதால், செயங்கொண்டபட்டினம், மணக்குடி, அனைக்குடம், சின்னக்கொசப்பள்ளம் ஆகிய ஊர் நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள முடியவில்லை. சம்பந்தப்பட்ட தோழர்களுக்கு தோழர் தில்லை-வில்லாளன் தனது வருத்தத்தைத் தெரிவித்துக்கொள்கிறார்.

## அன்பளிப்புகள்

★

பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரையார், தோழியர் அலமேலு அப்பாதுரையார் ஆகியோர் கலந்து கொண்ட நிகழ்ச்சிகளின் மூலம் 'நம் நாடு' வளர்ச்சிக்கு அன்பளிப்பாக வரப்பெற்ற தொகையின் விவரம் :-

15—6—57-ல், சென்னை—கோடம்பாக்கம் தோழர் தணிகாசலம் — தோழியர் மின்னலாதேவி மணவிழாயேற்றதன் நினைவாக ரூ. 2;

16—6—57-ல், வண்ணாரப்பேட்டை பேசின் ரோடு, தோழர் மா. கணேசன்—தோழியர் பத்மாவதி மணவிழாயேற்றதன் நினைவாக ரூ. 2;

17—6—57-ல், கீழ்ப்பாக்கம் தோழர் பா. ஆதிமூலம்—தோழியர் பேக்கால்மேரி மணவிழா யேற்றதன் நினைவாக ரூ. 2;

19—6—57-ல், புளியந்தோப்பு தோழர் த. தாஸ்—தோழியர் மு. சாகவதி மணவிழா யேற்றதன் நினைவாக ரூ. 2;

16—6—57-ல், புளியந்தோப்பு தோழர் சா. கோ. நாராயணசாமி—தோழியர் இந்திராணி மணவிழா யேற்றதன் நினைவாக ரூ. 2;

16—6—57-ல், திருவல்லிக்கேணி அயோத்திநகர், தோழர் பி. ஆறுமுகம்—தோழியர் தேசப்பட்டு மணவிழாயேற்றதன் நினைவாக ரூ. 1;

19—6—57-ல், புளியந்தோப்பு தோழர் இன்பகுமார்—தோழியர் குமாரநாயகி அவர்களின் பெண் மகவுக்கு 'வடிவு' எனப் பெயரிட்டதன் நினைவாக ரூ. 1;

19—6—57-ல், புளியந்தோப்பு தோழர் முனுசாமி—தோழியர் முத்தம்மாள் அவர்களின் செல்வி இதயராணிக்கு காதணிவிழா நடைபெற்றதன் நினைவாக ரூ. 1.

ஆக ரூ. 13-ம் வரப்பெற்றோம்—நன்றி. —பொறுப்பாளர்.

★

புலவர் அறிவுடைநம்பியின் மூலமாக, அவர் தலைமையிலும், முன்னிலையிலும், மணவிழா செய்துகொண்ட அன்பர்கள் 'நம் நாடு' வளர்ச்சிக்காக அன்பளிப்பாகத் தந்த தொகையின் விவரம் :—

9—6—56-ல், மணவிழா யேற்ற சித்துக்காடு தோழர் இளந்திரையன்—தோழியர் திரிபுரவல்லி மணமக்கள் ரூ. 3ம்;

10—6—57-ல், மணவிழா ஏற்றுக்கொண்ட பனங்குளம் தோழர் சந்தானம்—தோழியர் சந்தணம் மணமக்கள் ரூ. 3ம்;

13—6—57-ல், மணம்செய்து கொண்ட வீரியன்கோட்டை மணமக்கள் தோழர் சன்னாசி—தோழியர் செயம் ரூ. 1ம்;

17—6—57-ல், மணம் செய்து கொண்ட சிங்கம்புணரி தோழர் கிருட்டிணன்—தோழியர் செயம் மணமக்கள் ரூ. 3-ம்; ஆக ரூ. 10-ம் வரப்பெற்றோம்—நன்றி—பொறுப்பாளர்.

★

21—6—57-ல், லால்குடி வட்டம்—வே. துறையூர் — தோழர் பாலமுத்து—தோழியர் அங்கம்மாள் வாழ்க்கை ஒப்பந்த விழா, தோழர் கே.எ.பி. சாமி தலைமையில் நடைபெற்றபோது, தோழர்கள் பலர் வாழ்த்துரை வழங்கினர். இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிப்பாகத் தரப்பட்டது.

* * *

மேலபாண்ட மங்கலம்—தோழர் சண்முகம் தான் சீர்திருத்த மணம் செய்து கொண்டதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 2 அன்பளிப்பாகத் தந்துள்ளார்.

* * *

8—6—57 அன்று தாம்பரம் கழகத் தோழர் ஒருவரின் ஆண் மகவுக்கு, தோழர் கண்ணதாசன் அவர்களால் 'சம்பத்' எனப் பெயரிடப்பட்டதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிப்பாகத் தரப்பட்டது.

# குதிரைப் பந்தய ஒழிப்பு சட்டத்திற்குச் சமாதி?

## சூது வளர, குதிரை வளர்ப்பு அவசியமானதுதானும்!

சென்னை, ஜூலை 8—

குதிரைப் பந்தயத்தை ஒழிப்பதற்கான சட்டம் ஏற்கனவே நிறைவேற்றப்பட்டுள்ளது; ஆனல் அதை அரசாங்கம் இன்றுவரை அமுல் செய்யவில்லை. இனியும் எப்போது செயல்படுத்தப்படும் என்பதிலும் சந்தேகம் தோன்றும் தன்மையில், 1958-ல் அதை ஒழிப்பதா, இல்லையா என்பதைப்பற்றி அரசாங்கம் மீண்டும் ஆராயுமாம்.

குதிரைப் பந்தயம் இருப்பது குதிரைகளை வளர்க்கப் பயன்படுகிறதாம்!

இப்போது உள்ள குதிரைகள் எந்த நாட்டுக் குதிரைகள் என்றும் தகவல் இல்லையாம்!

க. அன்பழகன் :— "குதிரை வளர்க்கும் நோத்தில் சூதும் வளர்கிறதல்லவா?"

அமைச்சர் பக்தவத்சலம் :— 'இதை முற்றிலும் தவிர்ப்பதற்கில்லை; பந்தயமில்லாமல் குதிரை வளராது. சூது இல்லாமல் பந்தயம் நடைபெறாது'

"குதிரைப் பந்தயத்தை ஒழிப்பதற்கான சட்டத்தை இயற்றிய சட்டசபை, அதை அமுல் செய்வதற்கான அதிகாரத்தை அரசாங்கத்திற்கு அளித்துள்ளது என்றும், எந்தக் காலவரம்பும் நிர்ணயிக்கப்படவில்லை யென்றும், தோழர் எம். பி. சுப்பிரமணியம் கேட்ட கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில் அமைச்சர் பதிலளித்துள்ளார்.

க. அன்பழகன் :— "இந்தச் சூதாட்டத்தின் காரணமாக பலர் தற்கொலை செய்து கொண்டும், ஏழைகள் பணமிழந்து வாடுவதையும் அரசாங்கம் அறியுமா? அப்படி அறிந்தும் மனிதனைவிட குதிரை வளர்ப்பு அவ்வளவு மேலானது என்று அரசாங்கம் கருதுகிறதா?"

அமைச்சர் : — 'மனிதனைவிட குதிரை வளர்ப்பு மேலானது என்று அரசாங்கம் கருதவில்லை; குதிரை வளர்ப்பும் மனிதனுக்கு தேவையானதே! ஏழைகள் குதிரைப் பந்தயத்திற்கு போகாமல் இருப்பதற்காகத்தான் அவர்கள் பந்தய மைதானத்திற்குள் நுழைவதற்கான கட்டணம் அதிகரிக்கப்பட்டுள்ளது'

"நல்ல குதிரைகளை வளர்ப்பதற்கு குதிரைக் கண்காட்சிகளும் பரிசுகள் வழங்கும் திட்டமும் பயன்படாது" என்று, தோழர் ஏ. வி. பி. ஆசைத்தம்பியின் யோசனை ஒன்றை நிராகரித்து அமைச்சர் பதிலளித்துள்ளார்.

## கழகக் கூட்டங்கள்

★

**நெமலி :**

பெருமாள் கோவில் அருகில்
10—7—57 மாலை 6 மணிக்கு
தி. மு. கழக 6-வது ஆண்டு விழா

தலைவர் :
ப. கண்ணன்

பேசுவோர் :
கண்ணதாசன்
எஸ். எஸ். இராசேந்திரன்
முகவை ஆர் எஸ்.பாண்டியன்

★

**பிலிமிசை**

பெருமாள் கோயில் முன்பு
11—7—57 மாலை 5 மணிக்கு

தலைவர் :
மா. அ. இராமசாமி

பேசுவோர் :
சி. பி. சிற்றரசு
கோ. சிவப்பெருமாள்
வடிவேலு
து. பெரியசாமி

# 'பாராளுமன்ற ஜனநாயகம் வெற்றி பெற எதிர்க் கட்சி அவசியம்'

## 'பிரிட்டிஷார் காலத்தில் எவரும் தலையாட்டிகளா யிருக்கவில்லை'

'டாக்டர் ஏ. இராமசாமி முதலியார்
சர். பி. தியாகராயர் போன்றோர்
நல்ல வழிகாட்டிகளா யிருந்தனர்'

### சர். சி. பி. இராமசாமி அய்யர் புகழ்மாலை

பாராளுமன்ற ஜனநாயகம் கற்றுத்தரும் மகத்தான பாடம் எல்லாம், முயற்சிகள்—அறிவாற்றல்கள்—திறன்கள் எல்லாம் ஒரு கூட்டத்திற்கு மட்டுமே ஏகபோகமானது என்பதல்ல என்பதும், நாட்டினை இன்றும் நாளையும் வாழ்விக்கவும் வளர்க்கவுமான பெரும்பணியில் ஆர்வமும், திறனும் முயற்சியும், தேசாபிமானமும் சமமாகக் கொண்ட இரு வேறு கட்சிகள், கோஷ்டிகள் இருக்க வேண்டும் என்பதும்தான் என்று, டாக்டர் சி. பி. இராமசாமி அய்யர், கூட்டம் ஒன்றில் குறிப்பிட்டிருக்கிறார்.

'காமன்வெல்த் பார்லிமெண்டரி சங்கத்'த்தின் சென்னைக் கிளையில், தனது அனுபவங்கள் குறித்துப் பேசுகையில், ஒரு நாளும் இல்லாத திருநாளாய், நீதிக் கட்சியின் தலைவர்களை அவர் போற்றிப் புகழ்ந்துரைத்திருக்கிறார்.

"பிரிட்டிஷார் காலத்தில் சட்டமன்றத்தில் பணியாற்றிய எவரும், பதவி ஆசை கொண்டவர்களாகவும், பிரிட்டிஷாரின் 'ஆமாம்'சாமிகளாகவும் இருக்கவில்லை"

என்று அவர் அக்கூட்டத்தில் எடுத்துரைத்திருக்கிறார்.

அவர் குறிப்பட்டதாவது :—

"சர். பி. தியாகராய செட்டியாருடன் எனக்கு பல அரசியல் கருத்து வேறுபாடுகள் இருப்பினும், அவர் எனது சிறந்த நண்பராயிருந்தார்.

"இன்று பதவியிலிருந்து விலகுவது, அதிகார ஆசை என்றெல்லாம் பேசுகிறார்கள் அல்லவா? இந்த எண்ணங்கள் எல்லாம் முளைவிடுவதற்கு நெடுநாட்களுக்கு முன்பே தியாகராயர், ஒரு வழிகாட்டியாக விளங்கினார். அவரது நீதிக் கட்சி, நடைபெற்ற தேர்தலில் பெரும் வெற்றி பெற்ற சட்ட சபையில் பெரும்பான்மை இடங்களைப் பிடித்திருந்தும், அவரே தந்த வெற்றிகரமான தேர்தலை நடத்தியிருந்தும், அவர் பதவிக்கு விரும்பவில்லை.

இந்த விஷயத்தில், அவர், இந்தியாவிலேயே வேறெவருக்கும் இல்லாத பெருமையுடன் விளங்குகிறார்.

"பனகல் அரசர் பதவியிலிருந்தார். மக்களுக்கு அவர் பல தொண்டாற்றி யிருக்கிறார். அவர் மந்திரிசபையிலும் சரி, சட்டசபையிலும்சரி, பேசும் போதும் சரி, மிக கண்ணியமாகவும், உறுதியோடும் பேசுவார்; அவரைப் புகழ்வதற்கு வார்த்தைகளே இல்லை!

"டாக்டர் இராமசாமி முதலியார்தான் என்ன? அவர் சட்டசபையில் எதிர்க்கட்சியிலிருந்த என்னைக் கடுமையாகத் தாக்குவார்; ஆனாலும், அவரது தாக்குதலில் பகை ஏதும் இருக்காது.

"அந்த நாட்களில், சர்க்கார் எது செய்தாலும் எதிர்க்க வேண்டும் என்பது எதிர்க் கட்சியின் கடமையாயிருந்தது; ஆனாலும் எதிர்க்கட்சியினர், மிகச் சுறுசுறுப்பாகவும் கவனிப்பாகவுமிருந்தனர்.

டாக்டர் இராமசாமிமுதலியார், எஸ். சத்தியமூர்த்தி அய்யர், டாக்டர் சி. ஆர். ரெட்டி, போன்ற மேதைகள் நல்ல பேச்சாளர்களாயிருந்தவர்கள்; சர்க்காரின் கொள்கைகளை மிகக் கடுமையாகக் கண்டித்துப் பேசுவர்; என்றாலும் அவர்கள், மற்றவர்களின் கருத்துக்கு மதிப்பளிப்பதிலும், மிக விருப்பம் கொண்டவர்களாயிருந்தனர்."

# நடைபாதையில் 6,500 குடும்பங்கள்

## திட்டம் ஏதும் அமுலாக்கப்படவில்லையாம்?

சென்னை, ஜூலை 8—

1953-ல் கணக்கெடுத்த மக்கள் தொகையின்படி சென்னை நகரில் மட்டும் நடைபாதைகளில், குடியிருக்கும் குடும்பங்களின் எண்ணிக்கை 6,500 என்றும், 1,300 குடும்பங்களை கொருக்குப்பேட்டையில் குடியமர்த்துவதற்கு உருவாக்கப்பட்ட திட்டம் 1957-ல், மத்திய அரசாங்கத்தின் பார்வைக்கு அனுப்பப்பட்டுள்ளது என்றும், மாநிலத்தில் சேரிகளின் சீர்திருத்தத்திற்காக ரூ. 7 கோடியே 30 இலட்சம் செலவில் திட்டம் தயாரித்து மத்திய அரசாங்கத்திற்கு அனுப்பப்பட்டுள்ளது என்றும், மத்திய அரசாங்கம் அந்தத் திட்டத்தின் செலவை 1 கோடியே 68 இலட்சமாகக் குறைத்துள்ளது என்றும், இதுவரை ஒரு சேரிகூட சீர்திருத்தப்படவில்லை என்றும், தொழில் அமைச்சர் வெங்கட்ராமன் இன்று சட்ட சபையில் அறிவித்தார்.

ஏ. வி. பி. ஆசைத்தம்பி:—"நடைபாதையில் வசிப்பவர்களைக் கோவில்களில் குடியமர்த்த அரசாங்கம் ஆலோசிக்குமா?"

அமைச்சர் :—'அப்படிச் செய்வதற்கில்லை; அதனால் கோவில்களும் அசுத்தமாகி விடும்,'

க. அன்பழகன் :—'நடைபாதையில் வசிப்பவர்களுக்கு போலீஸ் தொல்லை தருவதை அரசாங்கம் கவனிக்குமா?"

அமைச்சர் :—'இது பற்றிய புகார்களைக் கவனித்து அரசாங்கம் தக்க நடவடிக்கை எடுக்கும்'

கேள்வி :—கூவம் நதிக்கரையில் வசிப்பவர்களை வேறு இடத்தில் குடியமர்த்தும் வரையில் அவர்களைப் போலீசார் வெளியேற்றாமல் செய்ய அரசாங்கம் செயல்படுமா?'

அமைச்சர் :—'கூவம் நதியோரம் சேரிகள் இருப்பது நகரத்தின் சுகாதாரத்தைப் பாதிப்பதாகும்.'

# சாரதா சட்டம் எங்கே?

## 10 வயது சிறுமிக்கு சுயம்வரம்?

போபால், ஜூலை 8—

பத்து வயதுப் பெண்ணுக்கு, தகப்பனர் ஒருவர், போபால் கிராமம் ஒன்றில் சுயம்வரம் நடத்தினாராம்!

மூவர், அந்தச் சிறுமியைப் பெறப் போட்டியிட்டனராம்! தங்களுக்குள் அடித்துக்கொண்டனராம், அந்த மூன்று பேர்களும்! பெண்ணின் தகப்பனாரோ, யாருக்கும் பரிந்துபேச முடியாது என்று கூறிவிட்டு, யார் பலசாலியோ அவருக்குத்தான் பெண்தரமுடியும் என்று கூறினாராம்!

பின்னர் நடைபெற்ற 'பலப் பரீட்சை'யில், 40 வயதான ஒருவர் வெற்றிபெற்றாராம்!

அந்த 40 வயதானவருக்கு அந்த 10 வயது சிறுமி, வேத பாராயணங்களுடனும், சடங்குகளுடனும் மணமுடித்து வைக்கப்பட்டாளாம்!

சாரதா சட்டம் எங்கே?

# உணவு உற்பத்தி

## பெருக்கியிருக்கும் இலட்சணம்!

### இந்த ஆண்டில் 30 இலட்சம் டன் கோதுமை இறக்குமதியாம்

இலட்சுமணபுரி, ஜூலை 9—

இந்த நடைமுறை ஆண்டில் 30 இலட்சம் டன் கோதுமை இறக்குமதி செய்யப்படும் என்றும், அமெரிக்காவிடமிருந்து புதிதாக கோதுமை கடன் பெறுவதற்கான பேச்சுவார்த்தைகள் முன்னேறிவருகின்றன என்றும் மத்திய உணவு மந்திரி ஜெயின் கூறியிருக்கிறாராம்!

**சொற்பயிற்சிக் கூட்டம்**

11—7—57 இரவு 8-மணிக்கு, சென்னை—சூளை, தி. மு. கழகத்தில் தோழர் ம.சோ. சீனிவாசன் தலைமையில், 'என் வேண்டும் இன்பத் திராவிடம்? என்ற பொருள்பற்றி பலர் பேசுவர்.

**தமிழ்ப் புலவர் வகுப்புத் துவக்கம்**

திரு. வி. க. இலக்கிய மன்றத்தின் சார்பில் வண்ணை சர். தியாகராயர் கல்லூரியில் 10—7—57 புதன்கிழமையன்று தமிழ் வகுப்புகள் துவக்கப்படும். சென்னைப் பல்கலைக் கழக புகுமுகத் தேர்வு, முதனிலைத் தேர்வுகளுக்குத் தனித்தனியாக வகுப்புகள் நடைபெறும். திங்கள் முதல் வெள்ளிவரை ஐந்து நாட்களில் மாலை 6-30 மணிமுதல் 8-30 மணிவரை வகுப்பு உண்டு. தேர்வுக்குச் செல்ல விரும்புவோரும் இலக்கியச் சுவையையுணரவிழைவோரும்—ஆடவரும் பெண்டிரும் வகுப்பில் சேரலாம்.

# இன்னும் ஓராண்டில் சட்டம் வருமாம்!

சென்னை, ஜூலை 8—

நிலவுடைமை பற்றி நாடு முழுவதும் ஒரே கொள்கை அடிப்படையில் சட்டம் உருவாக்கப்பட்டுவருகிறதாம்.

'இன்னும் சில திங்களில்—தவறினல் இன்னும் ஓராண்டு காலத்திற்குள் நிச்சயமாகக் காங்கிரஸ் அரசாங்கம் நிலவுடைமைக்கு உச்சவரம்பு நிர்ணயித்து சட்டம் கொண்டுவரும்' என்று ரெவின்யூ அமைச்சர் மாணிக்கவேலர் நிருபர்களிடம் தெரிவித்துள்ளார்.

# அண்ணு தெளிவுரை...

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

'திராவிட முன்னேற்றக் கழகம் எத்தகைய சாமர்த்தியத்தை விரும்புகிறதென்றல், நிதி அமைச்சர் சுப்பிரமணியம் போன்றவர்கள், இருக்கின்றதை மறைக்கின்றார்களே—அப்படிப்பட்ட சாமர்த்தியத்தை அல்ல! உள்ளதை உள்ளபடி சொல்லக்கூடிய நெஞ்சுத் துணிவு யாருக்கு இருக்கின்றதோ—இருப்பதை மறைக்காத நேர்மை எவரிடத்திலே இருக்கின்றதோ—எத்தகைய எதிர்ப்புகள் இருந்தாலும் அவைகளையெல்லாம் சமாளிக்கக்கூடிய நெஞ்சு உரம் எந்த இடத்திலே காணப்படுகின்றதோ அப்படிப்பட்ட சாமர்த்தியசாலிகளை திராவிடம் இன்றையத் தினம் கேட்கின்றது.

"வெகு காலத்திற்குப் பிறகு திராவிடத்திற்குக் குடியாட்சி கிடைத்து — திராவிடத்திற்குக் குதூகலம் ஏற்பட்டு, நமக்கெல்லாம் நீதியும்—நிம்மதியும்—இன்பமும் கிடைத்து, நாமெல்லாம், 'யார் யார் சாமர்த்தியசாலிகள்? —எப்படியெப்படி சாமர்த்தியசாலிகள்?'—என்று விரும்புகிற நேரத்தில், 'இப்படி ஒரு சாமர்த்தியசாலி இருக்கிறார்' என்று சுப்பிரமணியம் போன்றவர்களைக் காட்டினல், ஒருகணம் அந்த சமயத்திலே நாம் மகிழ்ச்சியடையக் கூடும்; ஆனல், இப்பொழுது திராவிடத்திலிருக்கின்ற நிலைமை, யார் யார் திராவிடத்திலுள்ள உண்மை நிலைமைகளை அறிந்து சொல்கின்றார்களோ அப்படிப்பட்டவர்களைத்தான் — அவர்களுக்கு சாமர்த்தியம் இருக்கின்றதோ இல்லையோ—அப்படிப்பட்டவர்களைத்தான் நாடு விரும்புகின்றது."

எட்டாவது வகுப்பு வரையில்

# இலவசக் கல்வி

ஜெய்ப்பூர், ஜூலை 8—

இந்தக் கல்வி ஆண்டு முதல் இராஜஸ்தான் மாநிலத்தில், 8-வது வகுப்பு வரையில் இலவசக் கல்வி அளிப்பதென மாநில சர்க்கார் முடிவு செய்திருக்கிறது.

# 500 கூட்டுறவுப் பண்ணைகள்!

புதுடில்லி, ஜூலை 9—

இந்தியா முழுவதிலுமாக சமூக நல அபிவிருத்தித் திட்டங்கள், தேசிய அபிவிருத்தித் திட்டங்கள் ஆகியவை அமுலாகிவரும் பிரதேசங்களில் புதிதாக சுமார் 500 கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்கள் அமைக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறதாம்.

மாவீரன்

# தாளமுத்துவுக்கு இறுதி வணக்கம்

துணைப் பொதுச்செயலாளர்
என். வி. நடராசன் செலுத்தினர்

23—6—57 அன்று தூத்துக்குடி நகரின் நெல்லை மாவட்ட தி. மு. கழகச் செயலாளர் தேர்தல் கூட்டம் முடிவுற்றதும், மாலை 6 மணிக்கு மறைந்த மாவீரன் தாளமுத்துவை அடக்கம் செய்யப்பட்டுள்ள இடத்திற்கு துணைப் பொதுச் செயலாளர் என். வி. நடராசன் அவர்கள் நகரச் செயலாளர் ஜோசப், பொதுக்குழு உறுப்பினர் எம். எஸ். சிவசாமி மற்றுமுள்ள தோழர்கள் ஆகியோருடன் சென்று அங்கு அமைக்கப்பட்டிருந்த நினைவுச் சின்னத்திற்கு தலைமைக் கழக சார்பில் மலர்மாலையை அணிவித்து இறுதி வணக்கத்தைச் செலுத்தினர்.

இந்த நினைவுச் சின்னம், ஆலைத் தொழிலாளர் சங்கத்திற்கு எனச் சொந்தக் கட்டிடம் அமைப்பதற்கு தோழர் தாளமுத்து, எல்லோருடைய உதவியாலும் வாங்கி அஸ்திவாரமும் எழுப்பப்பட்டிருந்த திடலின் ஒரு பகுதியில் அமைக்கப்பட்டிருக்கிறது.

**திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர் : இரா நெடுஞ்செழியன் எம்.ஏ**

